REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தினஇதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily ✵ The Official Organ Of The D.P.F.

மலர் 4] சென்னை: புரட்டாசி 6உ வெள்ளி (21—9—56) ★ ★ வெளியூர்: புரட்டாசி 7உ சனி (22—9—56) [இதழ் 88

## பழங்களிலிருந்து மிட்டாய்கள்!

★

புதுடில்லி, செப். 20—

மைசூரில் உள்ள உணவுத் தொழில் நுட்ப ஆராய்ச்சிக் கழகம், வாழை, பலா, கொய்யா, பப்பாளி, மா போன்ற பழங்களிலிருந்து மிட்டாய்களைத் தயாரிப்பதற்கு புதிய செய்முறையை உருவாக்கியுள்ளதாம்.

தொழில் ரீதியில் தயாரிக்க விரும்புவோருக்கு இந்திய ஆராய்ச்சி அபிவிருத்தி கார்ப்பரேஷன் அதுபற்றிய தகவல்களையும் முறைகளையும் அறிவித்து வருகிறது.

## அந்தோ! கொடுமை! தாங்கொணாத கொடுமை!!

# தூத்துக்குடி கே. வி. கே. சாமி கோரப்படுகொலை

## திராவிட செல்வத்திற்கு நேர்ந்த அவலமுடிவு

## நகரில் சோகஇருள் சூழ்ந்துள்ளது

## செய்தி கேட்ட அண்ணா அவர்கள் மனம் பதறினர்

### பொதுச்செயலாளர் நெடுஞ்செழியன் தூத்துக்குடி விரைந்துள்ளார்

### 'அறிவகம்' துக்கத்திலாழ்ந்துள்ளது

திராவிட முன்னேற்றக் கழகச் செயற்குழு (Working Committee) உறுப்பினரும் நெல்லை மாவட்ட தி. மு. கழகச் செயலாளரும் தூத்துக்குடி உப்புத் தொழிலாளர் சங்கம் உள்ளிட்ட பல தொழிற்சங்கங்களின் தலைவரும் அண்ணாவின் அருமைத் தம்பிமார்களில் ஒருவரும் இயக்கத்தின் நீண்டநாளைய உழைப்பாளருமான அருமைத் தோழர் கே. வி. கே. சாமி அவர்கள், 20—9—56 அன்று இரவு சுமார் 9-30 மணியளவில் தூத்துக்குடியில், தமது இல்லத்தை நோக்கிச் சைக்கிளில் நண்பர் ஒருவருடன் சென்றுகொண்டிருக்கையில், குண்டன் ஒருவனால் படுகொலை செய்யப்பட்டிருக்கிறார்.

அவருடன் சைக்கிளில் சென்ற நண்பர், இக்கொடூரச் சம்பவத்தைக் கண்டு நிலை தடுமாறி தரையில் சாய்ந்தாரென்றும் அவர் பிரக்ஞைபற்றுக் கிடப்பதாகவும் தெரிகிறது.

இக்கோரக் கொலைச் செய்தி திராவிட முன்னேற்றக் கழகத் தலைமை நிலையத்திற்கு (அறிவகம்) 20-9-56 இரவு 11-30 மணி அளவில், 'டிரங்க் போன்' மூலம் அறிவிக்கப்பட்டது.

தலைமைக் கழகத்திலிருந்த தோழர் ஆர். எஸ். பாண்டியன் அவர்கள செய்தி அறிந்து திடுக்கிட்டவராய், துணைப் பொதுச்செயலாளர் என். வி. நடராசன் அவர்களின இல்லத்திற்கு விரைந்தோடி செய்தி அறிவிக்க, அவரும் திடுக்கிட்டவராய் கண்கலங்கிய நிலையில் 'அறிவக'த்திற்கு ஓடிவந்து அண்ணா அவர்களுக்கு 'டிரங்க் போன்' மூலம் காஞ்சிபுரத்திற்குச் செய்தி அறிவித்தார்.

இந்தத் துக்ககரமான செய்தியைக் கேள்வியுற்ற அண்ணா அவர்கள் மனம் பதறி, ஒன்றும் புரியாது வேதனைக் குரலுடன டெலிபோனில் பேசினார்கள்.

விமானத்தின் மூலம் திருவனந்தபுரம் மார்க்கமாகத் தூத்துக்குடிக்கு அண்ணா அவர்களும் துணைப் பொதுச்செயலாளர் அவர்களும் புறப்பட முயன்றும் விமானத்தில் இடம் கிடைக்காததால் பிரயாணம் தடைப்பட்டது.

தோழர் கே. வி. கே. சாமியின் அவலநிலை பற்றிய இச்சோகச் செய்தியை மதுரை மாவட்டத்தில் சுற்றுப்பிரயாணம் செய்துகொண்டிருந்த பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்களுக்கு 'டிரங்க் போன்' மூலம் இரவு 2 மணியளவில் அறிவிக்கப்பட்டது. இச்செய்தியை அறிந்த அவர்கள், மதுரை மாவட்ட தி.மு. கழகச் செயலாளர் தோழர் எஸ். முத்து அவர்களுடனும் மற்ற சில தோழர்களுடனும் மதுரையிலிருந்து புறப்பட்டு தூத்துக்குடிக்குக் காரில் விரைந்து சென்றுள்ளார்.

தோழர் கே. வி. கே. சாமி கொலையுண்டார் என்ற சேதி நகரில் பரவியதும், நகரெங்கும் ஒரே பரபரப்பு ஏற்பட்டுள்ளதாயும், போலீஸ் அதிகாரிகள் ரிசர்வ் போலீஸ் படையுடன் பந்தோபஸ்து செய்ய விரைந்திருப்பதாயும் தெரியவருகிறது.

தோழர் கே. வி. கே. சாமி அவர்களைக் கொலை செய்த குண்டன் முகமூடி அணிந்திருந்தான் என்றும் அவரை ஆயுதத்தால் தலையில் பலமாகத் தாக்கியதாகவும் உடனே மண்டை பிளந்து அங்கேயே மாண்டுவிட்டாரென்றும் தெரியவருகிறது.



நகரப் போலீசார், கொலையுண்ட தோழர் சாமி அவர்களை மருத்துவ மனைக்கு எடுத்துச்சென்று பிரேத பரிசோதனை செய்து, 'கொலை செய்யப்பட்டார்' எனகண்டு வழக்கு ஒன்று பதிவு செய்திருப்பதாகவும், தீவிரமான புலன் விசாரணையிலீடுபட்டிருப்பதாகவும் தெரியவருகிறது.

தோழர் கே. வி. கே. சாமி கொலை செய்யப்பட்ட செய்தி தூத்துக்குடி நகரத்தில் காட்டுத் தீயெனப் பரவி பெரும் பரபரப்பையூட்டியிருக்கிறது.

நகர மக்களின் தொண்டன் ஒருவனுக்கு நேர்ந்த இந்தக் கொடுமை அனைவரையும் துக்கக் கடலில் ஆழ்த்தியுள்ளது. பலரும் செய்தி கேட்டுச் செய்வதறியாது சிலையாகிவிட்டிருக்கின்றனர்.

நகரத்தில் ஏற்பட்டுள்ள பரபரப்பு, போலீசாரை உஷார்படுத்தியிருக்கிறது. ரிசர்வ் பட்டாளம் வரவழைக்கப்பட்டிருப்பதாகவும் கூறப்படுகிறது.

## தலைமை நிலையத்தில் கழக கொடி தாழ்த்தப்பட்டது

தோழர் கே. வி. கே. சாமியின் இக்கோர மரணத்திற்கு அனுதாபம் தெரிவித்துத் தி. மு. கழகத் தலைமை நிலையத்தின் கொடி தாழ இறக்கப்பட்டது.

செய்தி அறிந்த சென்னைக் கிளைகள் அனைத்தும் மறைந்த கழக முன்னணி வீரருக்கு மரியாதை தெரிவிக்கும்வகையில் பறந்துகொண்டிருந்த கழகக் கொடிகளை பாதிக் கம்பத்திற்கு இறக்கியுள்ளனர்.

இன்று காலை தலைமை நிலையத்திற்குத் தோழர்கள் மு. கருணாநிதி, கே. ஏ. மதியழகன், சத்தியவாணிமுத்து, கே. கோவிந்தசாமி முதலியோரும் மற்றும் கிளைக்கழக நிர்வாகிகள், தோழர்கள், பொதுமக்கள் ஆகியோரும் துணைப் பொதுச்செயலாளரைச்சந்தித்துவிவரம் அறிந்து பெரிதும் வருந்தினர்—கண்கலங்கினர்.

பொறுப்பாசிரியர் காஞ்சி-கல்யாணசுந்தரம் அவர்கள் இன்று காலை அலுவலகம் வந்து செய்தியை அறிந்து, செயலற்ற நிலையில் சோர்ந்துவிட்டார்.

தி. மு. கழகத் தலைமை நிலையம் துக்கக் கடலில் ஆழ்ந்திருக்கிறது என்று கூறின் மிகையாகாது.

## சவ அடக்கம்

ஆரோக்கிய புரத்தில் தோழர் கே.வி. கே. சாமி அவர்களின் நிர்வாகத்தில் உள்ள பள்ளிக்கு அருகில் சவம் அடக்கம் செய்யப்படும் என்று தெரியவருகிறது.

இன்று மாலை 4-30 மணிக்கு சவ ஊர்வலமும் நடைபெறும் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## மாவீரனுக்கு இறுதிமரியாதை

நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்த பல கழகத் தோழர்களும், தூத்துக்குடி நகரின் பல பகுதிகளிலுமுள்ள கழகத் தோழர்கள், தொழிலாளர்கள், பொதுமக்கள் எல்லோரும் நாகம்மை படிப்பகத்தைச் சுற்றிலும் கூடி நின்று கண்ணீர் சொரிந்த வண்ணம் மறைந்த மாவீரனுக்குத் தங்களது இறுதி மரியாதையைத் தெரிவித்துக் கொள்கின்றனர்.

## பொதுச்செயலாளர் தூத்துக்குடி சேர்ந்தார்

பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள, மதுரை மாவட்டச் செயலாளர் தோழர் எஸ். முத்து, மற்றும் மதுரைத் தோழர்கள் சிலருடன் தூத்துக்குடிக்குக் காலை 11-மணியளவில் வந்துசேர்ந்து விட்டதாகச் செய்தி கிடைத்துள்ளது.

## கே. வி. கே. சாமி பொதுப் பணிகள்

சுயமரியாதை இயக்கத்தில் முக்கியத் தொண்டராயிருந்து பணியாற்றியிருக்கிறார்.

திராவிட கழகத்தில் 1948-ம் ஆண்டுவரை முக்கியப் பதவிகள் ஏற்றுத் தொண்டாற்றியிருக்கிறார்.

1947-ம் ஆண்டில் தூத்துக்குடியில் நடைபெற்ற திராவிட கழக மாநில மாநாட்டில் தொண்டர் படைத் தலைவராயிருந்து அரும் பணியாற்றியிருக்கிறார்.

திராவிட முன்னேற்றக் கழகத்தில் தற்போது நெல்லைமாவட்டச் செயலாளராகவும், மத்திய செயற்குழு உறுப்பினராகவும் இருந்து சிறந்த பணியில் ஈடுபட்டு வந்தார்.

1953-ம் ஆண்டு ஜூலை திங்களில் நடைபெற்ற மும்முனைப் போராட்டத்தின்போது தூத்துக்குடி இரயில் நிறுத்தக் கிளர்ச்சியின்போது சதிவழக்குக் குற்றம் சாட்டப்பட்டு, நீண்ட நாட்களாகக் காவலில் வைக்கப்பட்டிருந்து பின்னர் அவ்வழக்கில் வெற்றிபெற்றார்.

(4-ம் பக்கம் பார்க்க)

## சடலம்

தோழர் கே.வி.கே. சாமி அவர்களின் சடலம் கழகக் கொடிகளாலும் மலர்களாலும் அலங்கரிக்கப்பட்டு, நாகம்மையார் வாசக சாலையில் பொதுமக்களின் பார்வைக்காக வைக்கப்பட்டிருக்கிறது.

நம் நாடு

சென்னை 21—9—'56 வெள்ளி

# சுப்பிரமணியம் சவடால்!

மாற்றுக் கருத்தினரைப் பொறுப்பற்றத்தனமாகவும் ஏற்றுள்ள பதவிக்கு இழுக்குத் தரக்கூடிய இழி சொற்களாலும் ஏசுவதில் நிதி அமைச்சர் சுப்பிரமணியம் முதல் பரிசு பெறக்கூடியவராவார். மாற்றுக் கட்சியினரைக் கீழ்த்தரமாகத் தூற்றும் பணியினைத் திறம்படச் செய்வதற்கு ஏதோ அபார ஆற்றல் இருக்கவேண்டும் போலவும், அத்தகு அபார ஆற்றல் தமக்கு மட்டுமே இருப்பதுபோலவும் எண்ணிக்கொண்டு நிதி அமைச்சர், மிகமிக மோசமாக எதிர்க் கட்சியினரை ஏசி வருகிறார்.

இவ்வாறு கீழ்த்தரமாக அவர் மட்டும் ஏன் ஏசிவருகிறார்? இவ்வாறு ஏசுவதின் மூலம் எவருடைய அன்பையும் ஆதரவையும் பெற்றுவிட முடியுமென அவர் நம்பி இருக்கிறார் என்பவற்றிற்கு முதற்கண் விடை காண வேண்டும். அதன் பிறகுதான், எதிர்க்கட்சியினர் மீது அவர் உமிழும் வசைகளுக்குள் மறைந்து கிடக்கும் முரண்படும் குற்றச்சாட்டுகளையும் அபாண்டமான பொய்களையும் ஆராய வேண்டும்.

மாற்றுக் கட்சியினரைத் தூற்றுவதில் நிதிஅமைச்சருடன் போட்டி போட்டுக் கொண்டிருப்பவரில் முதலமைச்சர் காமராசரும் ஒரே நிலையில் இருப்பவராவார். தமிழ் நாட்டுக் காங்கிரசில், அவருக்குள்ள இடத்தை, எதிர்க் கட்சியினரை வாயில் வந்தபடி வசை பாடியதின் விளைவாகத்தான் காமராசரால் பெற முடிந்தது என்பது நிதி அமைச்சரின் திடநம்பிக்கை. அதுவுமன்றி, அவ்வாறு தூற்றுவதில் முன்னணியில் இருந்ததற்குப் பரிசாகவே காமராசருக்குக் காங்கிரஸ் மேலிடத்தார்களின் ஆதரவு இருக்கிறது என்பதும் நிதி அமைச்சரின் உள்ளக்கிடக்கை. எனவே, தமிழ் நாட்டுக் காங்கிரசின் தலைமையும், மேலிடத்தாரின் பேராதரவும் தமக்கும் இருக்கவேண்டுமானால், காமராசரைப் பின்பற்றி எதிர்க் கட்சியினரை ஏசித்தான் ஆகவேண்டும் என்ற முடிவிற்கு நிதி அமைச்சர் வந்துவிட்டார். இதுதான் அவர் பாடும் வசையில் மறைந்துகிடக்கும் சூட்சுமம்.

தமிழ் நாட்டின் மீது வடநாடு ஆதிக்கம் செலுத்துவது எனக் கூறப்படுவது நம்பத்தகாத பொய் என்பது நிதி அமைச்சர் உமிழ்ந்துவரும் வசைத் தொகுப்பில் காணப்பெறும் முதல் பசப்பு ஆகும். அதை மெய்ப்பிக்கும் வகையில், முதல் ஐந்தாண்டு திட்ட காலத்தில் இந்தியாமுழுவதிலும் 7,000 கிராமங்களுக்கு மின்சார வசதி செய்யப்பட்டிருப்பதாகவும், அதில் 3,500 தமிழ் நாட்டு கிராமங்களுக்கு மின்சார வசதி கிடைத்திருப்பதாகவும் ... தமிழ் ... புறக்கணிக்கப்படுகிறது எனப் பேசப்படுவது வடிகட்டிய பொய்யாகும் என வழக்காடுகிறார் நிதி அமைச்சர்.

இந்தப் புள்ளி விவரத்தின் உண்மை விவாதத்திற்குரியதாகும். நிதிஅமைச்சர் காட்டிய புள்ளிவிவரத்தை முழுவதும் உண்மையென்றே ஒப்புக்கொண்டாலும், வடநாட்டில் மின்சார வசதி பெற்ற கிராமங்களின் எண்ணிக்கையைக் காட்டிலும், தமிழ் நாட்டில் அவ்வசதி பெற்றுள்ள கிராமங்களின் எண்ணிக்கை சராசரியாக இருக்க வேண்டியதற்கு மிகுதியாக இருக்கிறது என்ற ஒரு காரணத்தைக்கொண்டே எவரும் பூரிப்படைந்துவிட முடியாது. அதே போன்று எண்ணிக்கை மிகுதி கண்டு, முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் தமிழ் நாடு அலட்சியப்படுத்தப் பட்டுவிட்டது என்ற பரவலான குற்றச்சாட்டு மறுக்கப் பட்டுவிட்டதாகவுமாகாது.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் மின்சார வசதி பெற்ற கிராமங்களின் எண்ணிக்கை வடநாட்டில் கூடுதலாக இருக்கிறதா அல்லது தமிழ்நாட்டில் கூடுதலாக இருக்கிறதா என ஆராயத் தொடங்கி, அவ்வாராய்ச்சியின் முடிவாக தமிழ் நாட்டில்தான் கூடுதலான எண்ணிக்கை இருக்கிறது என முடிவு கட்டி, எனவே, முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் தமிழ் நாடு வடநாட்டைவிட அதிகப்படி வசதி பெற்றிருக்கிறது என நிதிஅமைச்சர்பேசி இருப்பது, முழுப் பூசணியை ஒரு கவளச் சோற்றில் மறைக்கப் பார்க்கும் புத்திசாலித்தனமாகும்! அதைக் கூறி, முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் தொழில் ஏற்பாடுகளில் தென்னாடு வேண்டுமென்றே திட்டமிட்டு மட்டந் தட்டப்பட்டிருக்கிறது என்ற வெகுசன குற்றச்சாட்டை மூடிமறைத்து விட முடியும். நிதி அமைச்சர் நம்பி இருப்பது, கை முறத்தால் யானையை மறைத்துவிட முயன்ற பேதையின் செயலையே ஒக்கும்!

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் மின்சார வசதி பெற்றுள்ள கிராமங்களின் எண்ணிக்கை வடநாட்டைவிடத் தமிழ் நாட்டில் அதிகப்படியாக இருக்கிறது என்பது அவ்வளவு முக்கியமானது அல்ல. கிடைத்த மின்சார வசதி எத்துறைகளில், எவ்வாறு பயன்படுத்தப்பட்டு வருகிறது என்பதுதான் மிகமிக முக்கியமாகக் கருதப்பட வேண்டியதாகும்.

அவ்வாறு ஆராய்ந்து பார்க்குமிடத்து, வடநாட்டில் மின்சார வசதி பலவகைப்பட்ட தொழில் முன்னேற்றத்திற்குப் பயன்படுத்தப்படுகிறது. அவ்வேற்பாட்டினால் வேலையின்மை குறையவும், மக்களின் வாழ்க்கைத்தரம் உயரவும், உற்பத்திப் பெருகவும், சுகம் சுடூவுமான நிலை அங்கு உருவாகி இருக்கிறது.

தமிழ் நாட்டிலோ! 3,500 கிராமங்களில் மின்சார வசதி ... கிராமங்களில் ... 'போட்டிருக்கின்றனர் இந்த அமைச்சர்கள்! இந்த ஒன்றைத் தவிர, அதிகப்படியான கிராமங்களுக்கு மின்சார வசதி பெற்றுவிட்டதால், இந்த அமைச்சர்கள் பெற்றுத் தந்த உருவான பலன் வேறு எதுவும் கிடையாது.

கிடைத்துள்ள மின்சார வசதியினால், ஏதோ ஒன்றிரண்டு கிராமங்களில் விவசாயம் ஓரளவு பயன்பெற்றிருக்கக்கூடும் எனக் கூறலாம்.

இதைத் தவிர்த்து, மிகுதியான கிராமங்கள் மின்சார வசதியைப் பெற்றுவிட்டதின் விளைவாகத் தமிழ்நாட்டு தொழில் முன்னேற்றம், அதையொட்டிய செல்வப்பெருக்கம், பணிபுரிய புதிய வாய்ப்புகள், புதுவாழ்வு ஆகிய எதுவும் கைகூடவில்லை.

இந்த அவல உண்மையை நிதி அமைச்சரால்கூட மறுக்க முடியாது.

முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் தமிழ் நாடு அதிகமாக மின்சாரம் பெற்றுவிட்டது என நிதி அமைச்சர் பீத்திக்கொள்வதில் மறைந்துள்ள மற்றொரு பொருந்தாக் கூற்றை நாளை எழுதுவோம்.

## இனி கடல் மீதுதான் குறிக்கோளாம்!

நிலத்தில் கிடைப்பவைகளைப் பயன்படுத்த முயன்று விட்டார்களாம்!

சென்னை, செப். 19—

"நிலத்தில் கிடைக்கும் எல்லா உணவுப் பொருள்களையும் கண்டுபிடித்து பயன்படுத்த முயன்று விட்டோம்; இனி கடலில் கிடைக்கக்கூடிய உணவுப் பொருள்களைக் கண்டுபிடித்துப் பயன்படுத்த வேண்டும்.

"இந்தியாவின் மக்கள்தொகைக்கு குறைந்தது 40,50,000 டன் மீன் தேவைப்படுகிறது; ஆனால் இப்பொழுது பிடிக்கப்படுவதோ 11 இலட்சம் டன்தான்; எனவே, மீன் தொழிலை அபிவிருத்தி செய்ய இந்திய அரசாங்கம் முயற்சித்து வருகிறது"

என்று, மத்திய அமைச்சர் பி எஸ். தேஷ்முக் இங்கு நடைபெற்ற மீன் இலாகா மாநாட்டில் கூறியுள்ளார்.

## அவர்களுக்கும் கவலை தருகிறது!

பம்பாய், செப். 21—

'நயா பைசா' நாணயம் அமுலுக்கு வருவதால் தங்களது 'வருமானம்' பெரிதும் பாதிக்கப்படும் என்பதை புத்திக்கூர்மையுள்ள பிச்சைக்காரர்கள் உணரத் தொடங்கிவிட்டனராம்!

பழக்கத்திலுள்ள மிகவும் குறைந்த நாணயந்தான் பிச்சைக்காரர்களுக்கு தர்மமாகக் கிடைக்கும்; தற்போது காலணா (3 தம்பிடி) சாதாரணமாக அவர்களுக்குக் கிடைத்து வருகிறது. புதிய நாணய ஏற்பாட்டின்படி மிகக் குறைந்த நாணயமான 'நயா பைசா'தான் பிச்சைக்காரர்களுக்கு அளிக்கப்படும் இதனால் ஒரு ரூபாயின் அறுபத்திநான்கில் ஒரு பங்கான காலணா பெற்றுவரும் பிச்சைக்காரர்களுக்கு இனிமேல் ஒரு ரூபாயின் நூறில் ஒரு பங்கான 'நயா பைசா'தான் கிடைக்க முடியும்!

இந்த ஆபத்திலிருந்து தங்களைக் காப்பாற்றுவதற்கு ஒருவரும் கிடையாதென்றும், அதற்கான கிளர்ச்சி செய்வதற்கும் தங்களால் இயலாதென்றும் படித்த ஒரு பிச்சைக்காரர் கூறியிருக்கிறாராம்!

## சென்னைக்குக் கோதாவரி தண்ணீர் திருப்பப்படும்

கர்னூல், செப். 19—

கோதாவரி நதியின் அதிகப்படியான தண்ணீரை கிருஷ்ணா, பெண்ணாற்றுக்கு திருப்புவதற்கான திட்டம், தொடர்ந்து ஆராயப்படுமென்று ஆந்திர உதவி மந்திரி சஞ்சீவி ரெட்டி அறிவிக்கிறார்.

இதனால் சென்னை மாநிலத்திற்கு அந்தத் தண்ணீர் பயன்படும் என்று தெரியவருகிறது.

# பாலைவனம் பரவுவதைத் தடுக்க வடநாட்டில் உருவான திட்டம்

## 80 மைல் தூரத்திற்கு பழத்தோட்டங்களும், மரங்களும் பயிரிடப்படுமாம்

ஜோத்பூர், செப். 17—

இராஜஸ்தானில் பாலைவனம் பரவி வருவதையும், சிந்திலிருந்து மணல் காற்றடிப்பதையும் தடுப்பதற்கு ஜெய்சால்மர் - பகவல்பூருக்கு இடையே 80 மைல் தூரத்திற்கு மரங்கள், பழத்தோட்டங்கள் பயிரிடப்படுமாம்.

விரைவில் இந்தியா—பாகிஸ்தான் 400 மைல் நீளமுள்ள எல்லை பூராவும் இந்தத் தோட்டங்கள் பயிராகிவிடுமாம்.

பலவித மண்களில், பலவித வெப்ப நிலையில் பயிராகக்கூடிய செடிகளைக் குறித்து இதற்கான பரிசோதனைகள் நடைபெற்று வருகிறதாம்.

தென் முனையில் பல இடங்களில்—குறிப்பாக இராமேசுவரத்தில் உள்ள நிலையைக் குறித்து ஒரு திட்டமும் உருவாக்கப்படுவதாகத் தெரியவில்லை.

## பொதுத் தேர்தலில் குறிபோடும் முறை

கைவிடப்பட்டதாக நிதி அமைச்சர் கூறுகிறார்

சென்னை, செப். 19—

அடுத்துவரும் பொதுத் தேர்தலில் வாக்காளர்கள் வாக்குரிமையைப் பதிவு செய்யும்போது, பெயர்களுக்கு எதிராகப் பெருக்கல் குறி போன்ற ஒரு குறி போடும் முறையை அரசியல் கட்சிகள் விரும்பாததினால் கைவிடப்பட்டதாக அமைச்சர் சுப்பிரமணியம் அறிவிக்கிறார்.

## காதுஇல்லாதோருக்கு!

சிக்காகோ—

நோயாளியினுடைய விலா எலும்புமுருந்திலிருந்தும் (குருத்து எலும்பு) அடிவயிற்றின் தோலிலிருந்தும் காதுகளைத் தயாரித்தனதாக பிளாஸ்டிக் இரண சிகிச்சை நிபுணர் ஒருவர் தெரிவித்துள்ளார்.

ஒரே காதுடனோ அல்லது காதுகள் இல்லாமலோ பிறந்த 60 நோயாளிகளுக்கு தம் மருத்துவச்சாலை மாற்றுக் காதுகளை அமைத்துள்ளதாகவும் அவர் கூறியுள்ளார்.

குழந்தைக்கு $3\frac{1}{2}$ வயது இருக்கும்பொழுது காது தயாரிக்கும் வேலையைத் தொடங்க தாம் விரும்புவதாகவும், நோயாளி பள்ளிக்குச் செல்லத் தொடங்குவதற்குமுன் அது பூரணமாக முடியுமெனத் தாம் எதிர்பார்ப்பதாகவும் அவர் கூறுகிறார்.

## தேநீரும்—காப்பியும்!

தஞ்சை, செப். 20—

இந்தியத் தேநீர் நிலயம் நடத்திய ஓர் சோதனையில் தேநீர் அருந்துபவர்கள் 27·8 சதவிகிதம் என்றும், காப்பி அருந்துபவர்கள் 48·4 சதவிகிதம் என்றும் தெரியவந்ததாம்!

## புறம்பானசெயல்களில் ஈடுபடும் நிலைமை

காங்கிரசில் வளர்ந்து வருகிறதாம்

புதுடில்லி, செப். 17—

காங்கிரஸ் மேலிடத்தின் இரகசியக் கூட்டம் ஒன்று அபுல்கலாம் ஆசாத் வீட்டில் நடைபெற்றதாம். கூட்டத்திற்கு பண்டிதநேரு, பந்த், செகசீவன்ராம் மற்றும் பலர் வந்திருந்தனராம். காங்கிரஸ் மேலிடத்தத் தாக்கீதுகளை அவமதித்து, புறம்பான செயல்கள் ஈடுபடும் நிலையிலே நாடெங்கும் நிலைமை வளர்ந்து வருவதாகக் கூட்டத்தில் கருதப்பட்டது எனத் தெரிகிறது.

சிப்பர்திசன் பிராஜெக்ட் நிதித் திட்டத்தின்கீழ் இந்தியா முழுவதிலும் சுமார் 20,54,000 தொழிலாளர்கள் பயனடைந்துள்ளனர்; அத்திட்டம் 1952 நவம்பரில் அமுலுக்கு வந்தது.

## திருவனந்தபுரம் துறைமுகம்

ஒன்பதாண்டுகளுக்குப் பிறகு மீண்டும் உயிர் பெறுகிறது

ரூ.15 இலட்சம் செலவில் பழுதான துறை செப்பனிடப்பட்டதாம்

திருவனந்தபுரம், செப். 19—

1947-ம் ஆண்டில் கப்பல் ஒன்று மோதி துறை பழுதாகிப் போனதால் இதுவரை இயங்காமலிருந்த திருவனந்தபுரம் துறைமுகம் மீண்டும் வரும் அக்டோபர் முதல் உயிர் பெறும் எனத் தெரிய வருகிறது.

ரூ. 15,18,000 செலவில், 700 - அடி நீளமும், 25 அடி அகலமும் கொண்ட புதியதோர் துறை கட்டப்பட்டிருப்பதாயும் அதன் நெடுகிலும் மூன்று இரயில் பாதைகள் அமைந்துள்ளன என்றும் தெரிய வருகிறது.

5 மின்சார சாமான் தூக்கிகள் (கிரேன்கள்) அமைந்துள்ளன என்றும், இப்போது தினம் 750 டன் சாமான் இறக்குமதிக்குத் துறைமுகம் வசதியுடையதாக்கப்பட்டிருக்கிறதெனவும் தெரிய வருகிறது.

ஏற்றுமதி-இறக்குமதிக்கு உதவுவதற்காக 40 முதல் 50 மோட்டார் படகுகளும் சீக்கிரமே வந்து சேர விருக்கின்றனவாம்.

## குழந்தைகளுக்கு இலவசமாக பால்

மத்திய உதவி உணவு மந்திரி அறிவிப்பு

பெங்களூர், செப். 17—

சேரிகளில் வாழ்வோர், மற்றும் பள்ளி செல்லும் சிறு குழந்தைகள் இவர்களுக்கு இலவசமாக சுமார் 4 இலட்சம் பவுண்டு பால் பொடி வழங்கப்படும் என்று மத்திய உதவி உணவு மந்திரி எம். வி. கிருஷ்ணப்பா கூறியிருக்கிறார்.

ஒரு குழந்தைக்குத் தினந்தோறும் ஒரு கோப்பைப் பால் இலவசமாகத் தரப்பட வேண்டுமென்பது தனது கருத்து என்று அவர் கூறினாராம்.

மாணவர் விடுதிகளுக்கு அமெரிக்க நெய் வழங்கப்படும் என்றும் அவர் தகவல் தந்திருக்கிறார்.

## இயந்திரங்களுக்குப் பதிலாக இரும்புக் கனிகள்

புதுடில்லி, செப் 18—

ஜப்பானியத் தொழில் பிரதிநிதிகள், இந்தியாவின் வர்த்தக மந்திரி கார்மார்க்கரைச் சந்தித்து இந்தியாவுக்கு ஜவுளி இயந்திரங்கள் தந்துவிட்டு, மாறாக, ஏராளமான இரும்புக் கனியை இறக்குமதி செய்துகொள்ள ஜப்பான் விரும்புவதாக அறிவித்தனராம்.

## சிங்கப்பூர் தமிழ்ச் சங்கம்

சிங்கப்பூர், செப். 19—

சிங்கப்பூரில் தமிழர் சீர்திருத்தச் சங்கத்தின புதிய கட்டிடம் 16-9-56-ல் திறந்து வைக்கப்பட்டதாகத் தெரியவருகிறது.

## புதிய மைசூர் மாநிலம்

பெங்களூர், செப். 20—

புதிய மைசூர் மாநில அமைப்பை குடியரசுத் தலைவர் இராசேந்திரப் பிரசாத் நவம்பர் முதல் தேதி துவக்கிவைப்பார் என முதலமைச்சர் மஞ்சப்பா அறிவிக்கிறார்.



## 'விசாரிக்காமலேயே தீர்ப்பு வழங்கக் கூடாது'

நீதிபதி சோமசுந்தரம் தீர்ப்பு

"ஒரு வழக்கில் திருட்டுக் குற்றம் உறுதிப்படுத்தப்பட்டதாலேயே மீண்டும் ஒரு வழக்கில் விசாரிக்காமலேயே தண்டனை தருவது, நீதிக்குப் புறம்பானது; எனவே இந்த வழக்கை விசாரித்த மூன்று பெண் மாஜிஸ்திரேட்டுகளுக்குச் சட்டத்தை சரிவரப் பயன்படுத்தத் தெரியவில்லை என்றே நான் கருதுகிறேன்,"

என்று, சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி சோமசுந்தரம் அவர்கள் வழக்கு ஒன்றில் தீர்ப்பு வழங்குகையில் குறிப்பிட்டுள்ளார்.

இந்தத் திருட்டு வழக்கில் சம்பந்தப்பட்ட இருவரையும் அவர் விடுதலை செய்து, 'உடனடியாக அந்த மூன்று பெண் மாஜிஸ்திரேட்டுகளையும் பதவியிலிருந்து திரும்பப் பெறச் செய்வதே நீதி-நிர்வாகத்திற்கு நன்மையானதாகும்' என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

## அனுமதியின்றி துப்பாக்கி வைத்திருந்தவர் கைது

குடியாத்தம், செப். 19—

பேரணாம்பேட்டையில் வசிக்கும் இப்ராகிம என்பவர் அனுமதி பெறாமல் துப்பாக்கி வைத்திருந்ததற்காக போலீசார் அவரை கைது செய்தனர்—துப்பாக்கியும் கைப்பற்றப்பட்டது எனத் தெரியவருகிறது.

## யூகோ தலைநகரில் குருஷ்சேவ்

பெல்கிரேட், செப். 19—

ரஷ்ய கம்யூனிஸ்டு கட்சிச் செயலாளர் நிகிதா குருஷ்சேவ், இன்று விமானமூலம் யூகோஸ்லேவியத் தலைநகர் வந்துசேர்ந்திருக்கிறார்.

'தனிப்பட்ட முறை'யில் அவர் வந்திருப்பதாகக் கூறப்படுகிறது.

அவரை, யூகோஸ்லேவியத் தலைவர் மார்ஷல் டிட்டோ வரவேற்றிருக்கிறார்.

## பர்மா அரிசி விற்பனைக்கு வருமாம்

சென்னை, செப். 19—

பர்மாவிலிருந்து நல்ல அரிசி வருவதாகவும், அதை, படி 0-11-6 வீதம் விற்பதற்கு ஏற்பாடு செய்யப்படுமென்றும் அமைச்சர் பக்தவத்சலம் அறிவித்துள்ளாராம்.

## பர்மா கம்யூனிஸ்டுத் தலைவர் தலைக்கு விலை!

ரங்கூன், செப். 18—

பர்மா கம்யூனிஸ்டுத் தலைவர் தேன் என்பவரை உயிருடன் பிடித்துத் தருபவருக்கு ஒரு இலட்சம் ரூபாயும், மத்திய கமிட்டி உறுப்பினர்களைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு ரூ. 50,000-மும் பரிசாக வழங்கப்படும் என்று பர்மா அரசாங்கம் அறிவித்துள்ளதாம்.

## கதரே அணிவதென உறுதிமொழி தந்தனராம்!

கோவை, செப். 15—

பவானிசாகர் அருகாமையில் உள்ள ஓர் கிராமத்தில் வசிக்கும் 150 குடும்பங்களைச் சேர்ந்த 700 பேர்கள், ஒவ்வொருவரும் நூல் நூற்று எப்போதும் கதர் ஆடைகளையே உபயோகிப்பதாக விநோபாவிடம் வாக்குறுதியளித்ததாகக் கூறப்பட்டுள்ளது.

# 16 வயதுக்குட்பட்ட சிறுவர்கள் புகை பிடிப்பதற்குத் தடை

## மேற்கு வங்க சர்க்கார் உத்தரவு

கல்கத்தா, செப். 19—

16 வயதுக்கு உட்பட்ட மாணவர்கள் சிகரெட், சுருட்டு, பீடி ஏதேனும் வைத்திருப்பதைக் கண்டால் அவற்றைக் கைப்பற்றி அழித்துவிடுமாறு மாநிலத்தில் உள்ள பள்ளி அதிபர்கள் அனைவருக்கும் மேற்கு வங்க சர்க்கார் சுற்றறிக்கை ஒன்று அனுப்பியிருக்கின்றனராம்.

அதேபோலவே, தெருக்கள், பொது இடங்கள் இங்கெல்லாம் 16 வயதுக்கு உட்பட்ட சிறுவர்கள் புகை பிடிப்பதைக் கண்டால் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்குமாறு போலீசாருக்கும் உத்தரவிடப்பட்டிருக்கிறதாம்.

வரும் ஜனவரி முதல் உத்தரவுகள் அமுலுக்கு வருமாம்.

# 'மீனவர் நம்பிக்கையைப் பெற ஒரு விசாரணைக் குழு தேவை'

## 'அறிவுரைகூற ஒரு ஆலோசனைக் குழு வேண்டும்'

சர்க்காரின் மீன் இலாகா, மீனவரின் நலன்களுக்குப் பாதுகாப்புத் தருவதாக இல்லை என்பதையும் இன்றைய நிலையில் மீனவர்களது உடனடியான கோரிக்கை என்ன என்பதையும் விளக்கும் வகையில் சென்னை மீனவர் ஐக்கிய முன்னணித் தலைவர் தோழர் என். சிவரத்தினம் அவர்கள் கீழ்க்கண்ட அறிக்கையைத் தந்திருக்கிறார் :—

"19-9-56 காலை சென்னை ராஜாஜி மண்டபத்தில் அகில இந்திய சென்னை மீன் இலாகா அதிகாரிகளின் மாநாடு, சென்னை மீன் இலாகா மந்திரி பக்தவத்சலம் வரவேற்க, அகில இந்திய மீன் இலாகா மந்திரி டாக்டர் பஞ்சாப் ராவ் தேஷ்முக் தலைமை தாங்க, கவர்னர் பிரகாசா ஆசிகூற ஆடம்பரமாக ஆரம்பமாயிற்று.

"இதை முன்கூட்டியே அறிந்த மீனவர் ஐக்கிய முன்னணி, கடந்த பதினைந்து நாட்களாகச் சென்னையிலுள்ள மீனவர் குப்பங்கள்தோறும் கண்டனக் கூட்டங்கள் நடத்தி சென்னை மாநில மீன் இலாகா ஊழல்களை விளக்கி, 'மீனவர் நல்வாழ்வுக்கு வழிகாண வேண்டுமானால் உடனே ஒரு 'விசாரணைக் குழுவின்மூலம் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும்' என்றும், 'உத்தியோகப் பற்றற்ற மீனவர் ஆலோசனைக் குழு ஒன்றை நியமித்து மீனவர் நன்னம்பிக்கையை அரசாங்கம் பெறவேண்டும்' என்றும் வற்புறுத்தி வந்தது.

"மாநாட்டைத் துவக்கிவைத்த கவர்னர் பிரகாசா, நல்ல முறையில், 'மீன் உணவுப் பெருக்கத்தையோ, அதன் மூலம் வருவாயையோ எதிர்பார்ப்பதைவிட, ஆழ்கடலில் சென்று அவதியுறும் மீனவ மக்கள் நல்வாழ்விலே மனிதப் பண்போடு நாட்டம் கொள்ளுங்கள்' என்று இடித்துக் கூறினார்.

"வண்டிக்கு முன் குதிரையைப் பூட்டவேண்டிய வழி தவறி, குதிரைக்கு முன் வண்டியைப் பூட்டும் சென்னை மாநில மீன் இலாகாவின் போக்கைத் தட்டி மடக்க இந்த அதிகாரிகளின் மாநாடு பயன்படுமா? அல்லது வழக்கம்போல பல அதிகாரிகளின் மாநாடுகள் போலக் கூடிக் கலைந்ததா என்பதைப் பொறுத்துப் பார்ப்போம்.

"தனி ... மந்திரி காரியாலயத்தின் மூலம் மீனவருக்குத் தாழ்த்தப்பட்டோருக்குள்ள சலுகைகள் தரப்பட்டு, அவர்களிடையே சாதி, மத, குல பேதங்கள் அறவே ஒழிக்கப்படவேண்டும் கடல் பாதுகாப்பில் முதலிடமும், விஞ்ஞான முறையில் தொழிலபிவிருத்தியும், கட்டாயக் கல்வியும் தரப்பட வேண்டும். ஆற்று முகத்துவாரங்களை ஆழப்படுத்தி, மீன் பிடி துறைமுகங்கள் ஏற்படுத்தப் படவேண்டும். வீடு, குடிநீர், விளக்கு, ரோடு, சுகாதாரம், போக்குவரத்து வசதிகளை ஏற்படுத்தி, அரசியல்—பொருளாதார—சமுதாய—கல்வித் துறையில் இதர மக்களோடு சமப் பொறுப்பு—சம பங்கு—சம அந்தஸ்து இவைகள் ஏற்படுத்தப்பட்டு, அவற்றை அடைந்து வாழ்வதைத் தவிர வேறு எதையும் மீனவர் இனி ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்.

"இந்த நிலையை மறுக்கும் எந்த சர்க்காரையும் மீனவர் ஆதரிக்க மாட்டார்கள். ஆகையால் மீனவர் நன்னம்பிக்கையைப் பெறவேண்டுமானால், ஊழல்களைப் போக்க ஒரு விசாரணைக் குழுவும் திட்டங்களைப் பரிசிலனை செய்து யோசனை சொல்ல ஒரு ஆலோசனைக் குழுவும் உடனே ஏற்படுத்தப்பட வேண்டும்."

## 'விடுதலை'க்கு மறுப்பு

"17-9-56-ம் நாள் 'விடுதலை' இதழில், கழிஞ்சூர் தி. மு. கழகத்திலிருந்து இருவர் விலகிவிட்டதாக வெளிவந்த செய்தி பொய்யான செய்தி என்பதை இதன் மூலம் கழகத் தோழர்களுக்கு அறிவித்துக் கொள்கிறேன்,"

என்று, கழிஞ்சூர் தி. மு. கழகச் செயலாளர் தோழர் மு. கோதண்டன் அறிவிக்கிறார்.

## காரணம் வேறு கூற வேண்டுமா?

கோவை, செப். 20—

"நாம் எதிர்க் கட்சிகளுடன் சேர்ந்திருந்து பார்த்தோம்; நன்மை எதுவும் இல்லை.

"எதிர்க் கட்சிகளுடன் இருந்தால் ஆளும் கட்சியைத் திட்டலாம்; கிண்டல் செய்யலாம்.

"தனித்து நின்று அரசியல் துறையில் ஒன்றும் செய்ய முடியாது; அதனால்தான் உழைப்பாளர் கட்சியைக் காங்கிரசில் சேர்த்துவிட்டேன்"

என்று, அமைச்சர் இராமசாமி படையாச்சி, கோவையில் நடைபெற்ற வன்னிய குல மாநாட்டில் கூறியுள்ளார்.

மேலும் அவர் பேசுகையில், 'கட்சி விட்டு கட்சி மாறுகிறார்களே என்று நம்மை பலர் கண்டித்தார்கள்; இதை நாம் சட்டை செய்யக் கூடாது. காங்கிரசில் சேர்ந்ததால் தான் எனக்கு மந்திரி பதவி கிடைத்தது. காங்கிரஸ் கட்சியால் தான் நல்லது செய்யமுடியும். எனவே வன்னியர்கள் காங்கிரஸ் கட்சியைத் தவிர வேறு கட்சிகளில் சேரக்கூடாது' என்று பேசி முடித்தார்.

## பத்திரிகையாளர் ஊதிய நிர்ணயக் குழு

இந்திய அரசாங்கத்தினரால் நியமிக்கப்பட்ட பத்திரிகையாளர் ஊதிய நிர்ணயக்குழு சென்னையில் பல பத்திரிகைகளின் சார்பாகச் சாட்சியளிப்பவர்களின் குறிப்புகளைச் சேகரித்து வருகிறது எனத் தெரிகிறது.

## பிரிட்டனிலிருந்து போர் விமானங்கள்!

லண்டன், செப். 18—

பிரிட்டனிலிருந்து 25 போர் விமானங்களை இந்தியா கோரியுள்ளதாம் இதற்காக ஒப்பந்தமும் செய்யப்பட்டு விட்டதெனக் கூறப்படுகிறது.




## வேலூர்—தொட்டம்பாளையம்தி.மு.க.

15—9—56 இரவு 9 மணிக்கு கிளைக் கழகப் பொது உறுப்பினர் கூட்டம் தோழர் பாலகிருட்டிணன் தலைமையில் நடைபெற்றபோது, நிர்வாகிகள் தேர்தல் நடைபெற்றது. செயலாளர்: இரா. புகழேந்தி; துணைச்செயலாளர்: அ. குப்புசாமி; பொருளாளர்: மா. சுப்பிரமணியம்.

## மீஞ்சூர் தி. மு. கழகம்

17—9—56 காலை 8 மணிக்கு நடைபெற்ற கிளைக் கழகச் செயற்குழுக் கூட்டத்தில், கழக ஆண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடுவது என்றும், தேர்தல் நிதிக்கு ரூ. 101 கொடுப்பது என்றும், கழக உறுப்பினர்கள் சேர்க்கும் பணியில் மேலும் தீவிரமாக ஈடுபடுவதெனவும், விசைத்தறிகளைப் புகுத்திக் கைநெசவாளர்களின் வாழ்வைச் சீர்குலைக்கும் சர்க்காரின் போக்கைக் கண்டித்தும், தொடர்ச்சியாகச் சொற்பயிற்சிக் கூட்டங்கள் நடத்துவதெனவும் தீர்மானிக்கப்பட்டது.

## சென்னிமலை தி. மு. கழகம்

15—9—56 இரவு 9 மணியளவில் கிளைக் கழக அலுவலகத்தில், தோழர் கே துரைசாமி தலைமையில் நடைபெற்ற செயற்குழுக் கூட்டத்தில், 31-8-56ல் நடைபெற்றப் பொதுக் கூட்ட வரவு-செலவுக் கணக்கு சரிபார்த்து ஒப்புக்கொள்ளப்பட்டது. பின்னர், அரசாங்கத்தின்விசைத்தறி திணிப்பைக் கைவிடுமாறு மத்தியஅரசாங்கத்தையும் மாநில அரசாங்கத்தையும் கேட்டுக்கொண்டும், தோழர் கி. மனோகரன் அவர்களின் தந்தையார் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்தும், சூயஸ் கால்வாயைத் தேசிய மயமாக்கிய நாசரின் செயலைப் பாராட்டியும், இங்கிலாந்து ஆட்சியாளரின் ஏகாதிபத்தியப் போர் வெறியைக் கண்டித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## ஆட்குறைப்புக்குக் கண்டனம்

பம்பாய் செப். 19—

தற்காப்பு இலாகா, தாமோதர் திட்டம், மற்றும் இதர இடங்களிலும் சர்க்கார் அமுல் செய்ய உத்தேசித்துள்ள ஆட்குறைப்பைக் கண்டித்தும், அந்தத் தொழிலாளரின் நியாயமான கோரிக்கைகளை நிறைவேற்றுமாறு சர்க்காரைக் கோரியும், பி சோ. கட்சி நிர்வாகக் குழு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறதாகத் தெரிகிறது.

## டாக்டர் ஏ. மதுரம் உருவச்சிலை திறப்பு

திருச்சி, செப். 16—

"சிறுவயதிலேயே டாக்டர் ஏ. மதுரம் பெயரைக் கேட்டிருக்கிறேன்; அதுவே அவருடைய புகழைக் காட்டுகிறது; அவர் குழந்தை வைத்தியத்தில் நிபுணர்; ஏழைகளுக்கு அவர் இலவசமாக சேவை செய்தார்" என்று கூறி டாக்டர் ஏ. மதுரம் அவர்களின் உருவச்சிலையை காமராசர் திறந்து வைத்தார்.

விழாவில் பல பிரமுகர்கள் கலந்துகொண்டு டாக்டர் மதுரத்தின் தொண்டைப் பாராட்டினர்

## 36,000 'ஆயா'க்கள்!

புதுடில்லி, செப். 20—

சுகாதார முன்னேற்றத்திற்கு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கப்பட்டுள்ள தொகையில், மொத்தம் ரூ. 90 இலட்சம் செலவில் 36,000 'ஆயா'க்களுக்கு பயிற்சியளிப்பதென முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது.

## பெரியலூரில் தி. மு. கழக கிளை அமைப்பு

16—9—56 இரவு 8 மணிக்கு அறந்தாங்கி தாலுகா பெரியலூரில் தி. மு. கழகக் கிளை அமைப்புக் கூட்டம் தோழர் சித. மேகராசன் தலைமையில் நடைபெற்று, நிர்வாகிகள் தேர்தலும் நடைபெற்றது. செயலாளர்: எஸ். கலைச்செழியன்; துணைச்செயலாளர்: டி. பி. மாணிக்கம்; பொருளாளர்: வி. வி. வேலு; மாவட்டப் பிரதிநிதி: எஸ். வேலு; செயற்குழு உறுப்பினர்கள்: எம். முத்தையன், சோ. அ. காளிமுத்து, எம். எஸ். அய்யா, அ. கு. அடைக்கலம், பி. எஸ். கருப்பையா, எம். தெய்வசிகாமணி, ஏ. கே. பி. இராமசாமி.

## கணபதி—கோவை தி. மு. கழகம்

16—9—56 காலை 10 மணிக்கு, கிளைக் கழகப் பணிமனையில் தோழர் ஆ. சின்னசாமி தலைமையில் நடைபெற்ற கிளைக் கழகச் செயற்குழுக் கூட்டத்தில், கிளைக் கழக முதல் ஆண்டு விழாவையும் வள்ளுவர் படிப்பக மூன்றாவது ஆண்டு விழாவையும் கொண்டாடுவது பற்றித் தீர்மானங்கள் நிறைவேறின.

## சென்னை—37-வது வட்ட தி. மு. கழகம்

16—9—56 பகல் 2 மணிக்கு தோழர் கோ. இளவரசு தலைமையில் நடைபெற்ற கிளைக் கழகச் செயற்குழுக் கூட்டத்தில் கிளைக் கழகத் தோழர் டி எஸ். நடேசன் அவர்களின் ஆண் குழந்தை பன்னீர்செல்வம், டாக்டர் சி. நடேசனார் வாழ்க்கைத் துணைவியார் நாயகம் அம்மையார், தோழர் கி. மனோகரன் தந்தையார் ஆகியோர் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்தும், திராவிட நாடு (விடுதலை) பிரிவினை வாரக் கூட்டத்தை கழகப் பணிமனையிலே 23-9-56ல் நடத்துவதென்றும், வட்டத்தில் விடுபட்டுள்ள வாக்காளர்களைப் பதிவு செய்வதுடன் கழகத்தில் மேலும் உறுப்பினர்களைச் சேர்க்கும் பணியில் உடனடியாக ஈடுபட்டு ஆவன செய்வதெனவும், மற்றும் சில பிரச்சினைகளும் விவாதிக்கப்பட்டு முடிவு செய்யப்பட்டன.

## போத்தனூரில் கழகப் பொதுக்கூட்டம்

15—9—56 மாலை 6 மணிக்கு போத்தனூர் நூராபாத் மைதானத்தில் தோழர் மருதப்பன் தலைமையில் நடைபெற்ற கழகப் பொதுக் கூட்டத்தில் தோழர் க. அன்பழகன் 'திராவிட முன்னேற்றக் கழகமும் தேர்தலும்' என்பது பற்றி விளக்கமாகச் சொற்பொழிவாற்றினார்.

## சூாக்குடி தி. மு. கழகம்

13—9—56ல் மேற்படி கிளைக் கழகச் செயற்குழுத் தேர்தல், தோழர் அ. க. அழகு தலைமையில் நடைபெற்றது. செயலாளர்: பழ. குப்பான் அம்பலம்; துணைச்செயலாளர்: அழ சின்னமருதுபாண்டியன்; பொருளாளர்: க. சந்தானம்; மாவட்டப் பிரதிநிதி: மு. பழனியப்பன்; செயற்குழு உறுப்பினர்கள் 7 பேர் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## குருவாரெட்டியூர் தி.மு.க.

12—9—56ல் குருவாரெட்டியூர் தி. மு. கழக நிர்வாகிகள் தேர்தல் நடைபெற்றது. செயலாளர்: பா. பெ. நாராயணசாமி; துணைச்செயலாளர்: ஜி எஸ் குருமூர்த்தி; பொருளாளர்: ஆர். என். சாமி; மாவட்டப் பிரதிநிதி: பி. அர்த்தனாரி; 10 பேர் செயற்குழு உறுப்பினர்களாகவும் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# கே. வி. கே. சாமி

அவர்களின்

## பொதுப் பணிகள்

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

அண்மையில் நடந்த ஆத்துக் குடி நகரசபைத் தேர்தலில் வெற்றிபெற்று நற்பணியாற்றி வந்துள்ளார்.

ஆத்துக்குடி உப்புத் தொழிலாளர் சங்கம் உள்ளிட்ட பல தொழிற் சங்கங்களுக்குத் தலைவராயிருந்து வந்தார்.

9—9—56 அன்று சென்னையில் நடைபெற்ற தி. மு. கழகச் செயற்குழுக் கூட்டத்தில் கலந்துகொண்டு அண்ணா அவர்களுடனும் மற்றத் தலைவர்களுடனும் அளவளாவிச் சென்றார் நம் அருமை சாமி!

## உங்கள் குறிப்புக்கு!

புதுடில்லி, செப். 21— புனர்வாழ்விப்பு நிதி நிர்வாக நிறுவனம், இடம் பெயர்ந்து வந்துள்ளவர்களுக்கு 1956 ஜூலை கடைசிவரையில் மொத்தம் சுமார் ரூ. 10,23,54,000 கடன் தொகைகளாக வழங்கியிருக்கிறது.

கடன் தொகைகள் கோரி 1956 ஜூலை கடைசிவரையில் மொத்தம் 87,404 விண்ணப்பங்கள் வந்தன அவற்றில் 73,246 விண்ணப்பங்கள் முடிவு செய்யப்பட்டுள்ளன.

## பி. அண்ட் சி. ஆலை

### தி. மு. கழகத் தேர்தல் நிதிக் குழு உறுப்பினர்களுக்கு:

★

23-9-56 பகல் 2 மணிக்கு திரு. வி. க. மறுமலர்ச்சி மன்றப் பணிமனையில் செயற்குழு உறுப்பினர்கள் கூட்டம் நடைபெறும். தோழர்கள் வசூலித்தத் தேர்தல் நிதித் தொகையுடன் வருகை தந்து கூட்டத்தைச் சிறப்பிக்குமாறு வேண்டுகிறேன்"

என்று தோழர் கே. சுப்பிரமணியம் அறிவிக்கிறார்.

## கோவை மாவட்ட

### திராவிட மாணவர்களுக்கு:

"கோவை மாவட்ட (நீலகிரி-மலபார் உள்பட)த்தைச் சேர்ந்த பல இடங்களில் இன்னும் மாணவர் கழகம் அமைக்கப்படாமல் இருக்கிறது; அந்தந்த இடங்களில் உடனடியாக மாணவர் கழகங்களை அமைத்து மாவட்டப் பிரதிநிதியையும் தேர்ந்தெடுத்து உடனடியாக அறிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்"

என்று, அமைப்பாளர் கோவை-செழியன் அவர்கள் அறிவிக்கிறார்.

## திருமணங்கள்

23-9-56 காலை 6 மணிக்கு, சென்னை-வண்ணை சோலையப்பன் தெரு எண் 121 இல்லத்தில் தோழர் கே. எம். கண்ணபிரான் தலைமையில் தோழர் எம். சேணி—தோழியர் எஸ். குப்பம்மாள் திருமணம் நடைபெறும்.

தோழியர் அலமேலு-அப்பாதுரை, தோழர்கள் இரா. இளந்தென்றல், எம் எஸ் சி, உலகநாதன், மதிவாணன், போஜர்-சுப்பிரமணியம் ஆகியோர் சொற்பொழிவாற்றுவர்.

* * *

23-9-56 காலை 8-30 மணிக்கு, சென்னை — சிந்தாதிரிப்பேட்டை படவட்டம்மன் கோவில் தெரு, எண் 4 இல்லத்தில் தோழர் அலெக்சாண்டர் ஜோசப்—தோழியர் செல்லம்மாள் திருமணம் நடைபெறும். 24-9-56 மாலை 5-மணிக்கு சேணிகுண்டா பஜனை கோவில் தெருவிலுள்ள தோழர் சி. ஞானப்பிரகாசம் இல்லத்தில் மணமக்களுக்கு வரவேற்பும் வாழ்த்தும் அளிக்கப்படும். அண்ணா அவர்கள் வாழ்த்துரை வழங்குவார்.

# திராவிட நாடு விடுதலை நாள்

## பொதுக்கூட்டங்கள்

★

**திருச்சி:**

23—9—56 காலை 9 மணி முதல் திருச்சி நகரத்திலுள்ள எல்லாக் கிளைக் கழகங்களிலும் பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் கொடியேற்றி வைப்பார்.

மாலை 5 மணிக்கு, மெயின் கார்ட் கேட்டிலிருந்து மாபெரும் ஊர்வலம் புறப்படும்.

மாலை 6 மணிக்கு, டவுன் ஹால் முன்னிலையில், தோழர் ஏ. பி. தர்மலிங்கம் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெறும்; பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன், எம். எஸ். மணி ஆகியோர் பேசுவர்.

**செங்கற்பட்டு:**

23—9—56 மாலை 6 மணிக்கு, தர்க்கா திடலில், தோழர் டி. என். சம்பந்தம் தலைமையில் நடைபெறும். தோழர்கள் என். வி. நடராசன், டி. கே. சீனிவாசன் ஆகியோர் சொற்பொழிவாற்றுவர்.

**திருவண்ணாமலை:**

23—9—56 மாலை 6-30 மணிக்கு பெரிய தெரு மேட்டில், தோழர் எஸ். முருகையா தலைமையில் நடைபெறும். தோழர் ஈ. வெ. கி. சம்பத் சொற்பொழிவாற்றுவார்.

**நாகை:**

23—9—56 மாலை 6-30 மணிக்கு நாகை அவுரித் திடலில் நடைபெறும். தோழர் கி. மனோகரன் மற்றும் பலர் பேசுவர். அன்று காலை, தோழர் கி. மனோகரன் அவர்கள் நகரின் பல பகுதிகளில் கழகக் கொடியேற்றி வைப்பார்.

**குன்னிப்பாளையம்:**

23—9—56 மாலை 5 மணிக்கு, குன்னிப்பாளையம் அண்ணா திடலில், தி. மு. கழகக் கிளை துவக்க விழாவும் திராவிட நாடு பிரிவினை நாள் விழாவும் தோழர் ஏ. கே. வில்லவன்-கோதை தலைமையில் நடைபெறும். தோழர்கள் தில்லை-வில்லாளன், ப. இராசமாணிக்கம் ஆகியோர் பேசுவர்.

**குன்னூர் (நீலகிரி):**

23—9—56 மாலை 4 மணிக்கு, சவகர் பேட்டையில் நடைபெறும். தோழர் என். எஸ். இளங்கோ சொற்பொழிவாற்றுவார்.

**ஊட்டி (நீலகிரி):**

23—9—56 பகல் 1 மணிக்குப் போஸ் மைதானத்தில் நடைபெறும். தோழர் என். எஸ் இளங்கோ சொற்பொழிவாற்றுவார்.

**சென்னை 16-வது வட்டம்**

23—9—56 காலை 8 மணிக்கு, தோழர் சி. பஞ்சாட்சரம் தலைமையில் ஓர் மாபெரும் ஊர்வலம் நடைபெறும். துணைப் பொதுச் செயலாளர் என். வி. நடராசன் அவர்கள் கலந்துகொள்வார். மாலை 6 மணிக்கு திராவிட நாடு பிரிவினை நாள் விழாப் பொதுக் கூட்டம் நடைபெறும். தோழர்கள் என். வி. நடராசன், என். சிவரத்தினம், கே. எம். கண்ணபிரான் ஆகியோர் சொற்பொழிவாற்றுவர்.

**சென்னை-31-வது வட்டம்:**

23—9—56ல் மேற்படி வட்ட அழகிரி மன்றச்சார்பில், மன்றப் பணிமனையில் தோழர் எசேக்கியேல் தலைமையில் நடைபெறும். தோழர்கள் மணி, தீனதயாளன், தாஸ், வில்லவன்கோதை, வளவன், துரைராசு, கருணாகரன், கருமுகில் ஆகியோர் பேசுவர்.

**சென்னை-30-வது வட்டம்:**

23—9—56 காலை 9-30 மணிக்கு தோழர் கா. மு. செங்கமுகி தலைமையில், கிளைக் கழகக் கட்டிடத்தில் நடைபெறும். கழகத் தோழர்கள் அனைவரும் வருகை தந்து விழாவினைச் சிறப்பிக்குமாறு கேட்டுக்கொள்ளப் படுகிறார்கள்.

**சென்னை 40-வது வட்டம்:**

23—9—56 அன்று மேற்படி வட்ட தோழமைக் கழகப் பணிமனையில் விழா கொண்டாடப் பெறும்; காலை 8 மணிக்கு, தி. மு. கழகக் கொடியை தி. துரைக்கண்ணு ஏற்றி வைப்பார்; பகல் 12 மணிக்கு ஏழைகளுக்குச் சோறு வார்க்கப் படும்; தோழர் கே. அறிவழகன் வரவேற்க, தோழர்கள் பெ பாலு, மூர்த்தி இசைவிருந்தளிப்பர்.

**சென்னை 37-வது வட்டம்:**

23—9—56 காலை 8 மணிக்கு, சென்னை — இராயப்பேட்டை தி. மு. கழகப் பணிமனையில் விழா நடைபெறும்; தோழர் ஏ. எல் கே சாமி கழகக் கொடியை ஏற்றிவைப்பார்; தோழர் ம. பி. இராமலிங்கம் தலைமையில் தோழர்கள் பலர் பேசுவர்.

**கிளண்டேல் (நீலகிரி):**

24—9—56 மாலை 4 மணிக்கு பேக்டரி மைதானத்தில் தோழர் என். எஸ். இளங்கோ பேசுவார்.

**இடைப்பாடி (சேலம்):**

23—9—56 மாலை 5 மணிக்கு வேலாயுதம் படிப்பகத்திலிருந்து ஓர் ஊர்வலம் தோழர் ஏ. கே. கே. இராசமாணிக்கம் தலைமையில் புறப்பட்டு, முக்கிய தெருக்கள் வழியாகச் சென்று ஆரம்பப் பாடசாலை மைதானத்தை அடையும். மைதானத்தில் தி. மு. கழகக் கொடி ஏற்றுவிக்கப்படும். இரவு 8 மணிக்கு பெரிய மாரியம்மன் கோவில் மைதானத்தில் 'உதய சூரியன்' என்னும் தெருக்கூத்து வள்ளுவர் கலா மன்றத்தாரால் நடத்தப்படும். முத்தமிழ் கலா குழுவினர் இசை விருந்தளிப்பர்.

**மதுராந்தகம்:**

23—9—56 மாலை மதுராந்தகம் தி. மு. கழகக் கட்டிடத்தருகில் உள்ள அண்ணா திடலில் தோழர் பி. சிவானந்தம் தலைமையில் நடைபெறும். தோழர்கள் எம். எல் பாலு, ஏ சண்முகம் ஆகியோர் பேசுவர்.

**திருவள்ளூர்:**

23—9—56 மாலை 6 மணிக்கு அழகிரி படிப்பகத்தின் எதிரில், தோழர் எம். கே. ஜி. சாமி தலைமையில் நடைபெறும் தோழர் டி. ஆர் வரதன், மற்றும் பலர் பேசுவர்.

**புதுவை—அரியலூர்:**

23—9—56 மாலை 4 மணியளவில் கழகப் பணிமனையில், தோழர் ச. சிவப்பிரகாசம் தலைமையில் நடைபெறும். தோழர்கள் வ. நெடுஞ்சேரன், மா. இளந்திரையன், தணிகாசலம், சின்னப்பிள்ளை ஆகியோர் பேசுவர். கழகத் தோழர்களுக்குத் தோழர் கு. விநாயகமூர்த்தி அவர்கள் தலைமையில் தேனீர் விருந்து நடைபெறும்.

**குன்றத்தூர்:**

22—9—56 மாலை 6 மணியளவில் பெரியத் தெருவில், தோழர் எஸ். கே. எஸ். மணி தலைமையில் நடைபெறும். தோழர்கள் டி. என். சம்பந்தம், டி. கே. போரூரான், டி. கே. சிவகுமாரன், டி. நாகப்பன், டி. டி. தணிகாசலம் ஆகியோர் பேசுவர்.

★

**விருதுநகர்:**

23—9—56 மாலை 3 மணிக்கு முத்தாரம்பட்டியில் உள்ள எம். ஜி. ஆர். மன்றத்திலிருந்து சிலம்பாட்டம், புலிவேடம் ஆட்டத்துடன் ஊர்வலம் புறப்பட்டு மேலரத வீதியாக வந்து நெல்லுக்கடை மைதானத்தில் வந்து சேரும்; இரவு 8 மணிக்கு நெல்லுக்கடை மைதானத்தில் பொதுக்கூட்டம் நடைபெறும்; தோழர்கள் எஸ் இரத்தினம், அரங்கநாதன், எஸ். சுப்பையா, எஸ். கலிங்கன் ஆகியோர் பேசுவர். மு. வசனப்பித்தன் அவர்களும் கலந்து கொள்கிறார்.

**கும்பகோணம்:**

23—9—56 காலையில் நகரெங்கும் கொடியேற்றப்படும். காலை 9 மணிக்கு படையாச்சி தெருவில் 'அண்ணா படிப்பகம்' திறப்பு விழா நடைபெறும். தோழர்கள் வி சின்னதம்பி, சு. பத்மநாபன், எஸ். ஆர். ராதா ஆகியோர் பேசுவார்கள் காலையில் லைசக்கிள் ஊர்வலம் நடைபெறும்.

**கள்ளக்குறிச்சி:**

23—9—56 மாலை 6 மணிக்கு வள்ளுவர் திடலில் நடைபெறும். தோழர்கள் க. அன்பழகன், மு. பாண்டியன் ஆகியோர் பேசுவர்

**பெங்களூர்—சீராமபுரம்:**

23—9—56 மாலை 6 மணிக்கு, வ. உ. சி. திடலில், தோழர் மு அண்ணியப்பன் தலைமையில் நடைபெறும். தோழர்கள் அ. பெரியசாமி, செ விழியன், எஸ். வி. பதி, வே இளஞ்சேரன் ஆகியோர் பேசுவர். காலை $8\frac{1}{2}$ மணிக்கு தோழர் கே. விசயரங்கம் அவர்களால் கொடியேற்று விழாவும், தோழர் வி. சுப்பிரமணி தலைமையில் லைசக்கிள் ஊர்வலமும் நடைபெறும்.

**சென்னை—4-வது வட்டம்:**

23—9—56 பகல் $1\frac{1}{2}$ மணிக்கு இளைஞர் முன்னேற்ற மன்றத்திலிருந்து தோழர் கே. எஸ். அருணாசலம் தலைமையில் ஊர்வலம் நடைபெறும். தோழர்கள் அனைவரும் கழகக் கொடிகளுடன் கலந்துகொள்ளுமாறு கேட்டுக்கொள்ளப்படுகின்றனர்.

**ஆமதாபாத்—நரோடா:**

23—9—56 மாலை 5 மணிக்கு ஆமதாபாத் நரோடா ரோட் கஸ்தூரிபாய் சாலில் தோழர் நா. முனுசாமி தலைமையில் நடைபெறும். தோழர்கள் இரா. தணிகாசலம், இரா. வைத்திலிங்கம், டி. பி. பாலகிருட்டிணன் ஆகியோர் பேசுவர். தோழியர் இரத்தினம் பாள்—இராசன் இசை விருந்தும், மு. கா. மன்றத்தாரால் அண்ணாவின் 'பெரிய மனுஷாள் அப்படித்தான்' என்ற நாடகமும் நடைபெறும்.

**சென்னை—திருவல்லிக்கேணி**

23—9—56 மாலை 5 மணிக்கு, கே. எஸ். பாண்டியன் படிப்பகப் பணிமனையில், தோழர் எம். கே. மணி தலைமையில் நடைபெறும். தோழர்கள் இரா. இளம்பரிதி, நெல்லை-கபிலன், மா. பா. சாரதி, இ. மு. நெடுமாறன், மற்றும் பலர் பேசுவர்.

**தண்டராம்பட்டு:**

23—9—56-ல், தோழர் ம சு. நடராசன் தலைமையில் நடைபெறும்; தோழர்கள் ஈ. வெ கி சம்பத், ப. உ. சண்முகம் பேசுவர்.

அன்று மாலை 4 மணிக்கு தோழர் ஈ. வெ. கி சம்பத் அவர்களுக்கு தண்டராம்பட்டு ஊராண்மைக் கழகத்தில் வரவேற்பு அளிக்கவும் தீர்மானிக்கப்பட்டுள்ளது.

## கோவையில் சிறப்புக்கூட்டம்

கோவை தி. மு. கழக மாணவர் கிளையின் சார்பில் 23-9-56-ல், கோவை சண்முகா இசையரங்கில் சிறப்புக் கூட்டம் நடைபெறும், தோழர்கள்: மு. கருணாநிதி, கி. மனோகரன், மாறன், ஆர். எஸ். பாண்டியன் ஆகியோர் பேசுவர்.

**விருதம்பட்டு:**

23—9—56 காலை 9 மணிக்குக் கொடியேற்று விழாவும், சிறுவர்களுக்கு இனிப்பு வழங்குதலும் நடைபெறும். தோழர்கள் அ. கருத்தோவியம், அ திராவிட மணி ஆகியோர் பேசுவர்.

**திருவம்பநல்லூர்:**

23—9—56 மாலை 5 மணிக்கு, திருவம்பால்லூர் பள்ளி அருகில் தோழர் என். செல்வதுரை தலைமையில் நடைபெறும்; தோழர் பொ. தருமன், என். அசோகன், ம கோ. மணி, ஆர் சின்னத்தம்பி, தி. துரைராசன் ஆகியோர் பேசுவர்.

**பொன்மலை—மேலக் கற்கண்டார்கோட்டை:**

24—9—56 மாலை 6 மணிக்கு. திரு. வி. க. திடலில் தோழர் கே துரைராஜ் தலைமையில் நடைபெறும். தோழர்கள் கி. மனோகரன், அம்பில்-தர்மலிங்கம், மதிவாணன் ஆகியோர் பேசுவர்.

**வாளவெட்டி:**

24—9—56 மாலை 6 மணிக்கு, தி. மலை வட்டம் சு. வாளவெட்டி வி. இரத்தினம் கடை எதிரில், தோழர் ஆர். கோவிந்தசாமி தலைமையில் நடைபெறும் தோழர்கள் ஈ. வெ. கி. சம்பத், ப உ. சண்முகம் பேசுவர்.

**'அரக்கு மாளிகை'—நாடகம்**

23-9-56-ல், மல்ல சமுத்திரத்தில் திராவிட நாடு விடுதலை நாள் கொண்டாட்டத்தை யொட்டி 'அரக்கு மாளிகை' என்ற நாடகம் நடைபெறும்.

**திரு. வி. க. நினைவு நாள்**

22-9-56 மாலை 6-30 மணிக்கு சென்னை, நூலை மாணிக்கச்செட்டித் தெரு, எண் 10 மண்டபத்தில் திருவள்ளுவர் கழகச் சார்பில் திரு. இரா. சொக்கலிங்கனார் தலைமையில் திரு. ஆ. தேவநாதன் 'திருவள்ளுவரும் திரு. வி. க.-வும்' என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றுவார்.

**கள்ளக்குறிச்சி திருக்குறள் மாணவர் மாநாடு**

23-9-56 காலை 9-30 மணிக்கு, கள்ளக்குறிச்சி கழக உயர் நிலைப் பள்ளி மாணவர்கள் சார்பில் சீனிவாசன் கொட்டகையில் அமைந்துள்ள திரு. வி. க. பந்தலில் திரு. டாக்டர் அ. சிதம்பரநாதன் தலைமையில் நடைபெறும். திரு. கா. மீனாட்சிசுந்தரனார், கா. அப்பாதுரை, மயிலை-சிவமுத்து க. அன்பழகன், தோழியர் அலமேலு-அப்பாதுரை, மற்றும் பலர் சொற்பொழிவாற்றுவர்.

**கட்டிடத் திறப்பு விழா**

22-9-56 மாலை 4-30 மணிக்கு புகளூர் சர்க்கரை ஆலைக்கு அருகில் சர்க்கரை ஆலை பாட்டாளிகள் சங்கக் கட்டிடத் திறப்பு விழா நடைபெறும். தோழர் டி. எம். நல்லசாமி கட்டிடத்தைத் திறந்து வைப்பார். தோழர்கள் அம்பில் தருமலிங்கம், பி. ஆர். ராமசாமி, கு. வெங்கிடாசலம், மற்றும் பலர் சொற்பொழிவாற்றுவர்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று, (24, நாரியணநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப் பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

